# அரப்பள்ளி

## புனித மேரிமாதா ஓர்த்தடோக்ஸ் தேவாலயம்
## திருவிதாங்கோடு



புனித தோமையார் சர்வதேச திருத்தலம்
திருவிதாங்கோடு

அற்புத கலைநுணுக்க சித்திர வேலைப்பாடுகள் அடங்கிய வாசல்



சாட்சியாக விளங்குகின்ற
பண்டையகால
வரலாற்றுச்சின்னங்கள்





போர்ச்சுக்கீஸியர் கால நிகழ்வுகளை
பறைசாற்றுகின்ற
தூபகலசமும், ஜெபபீடமும்



சித்திர வேலைப்பாடுகள்
உள்ள கற்சுவர்



புனித தோமையார் சர்வதேச திருத்தலம்

# அரப்பள்ளி

"என் ஆண்டவரே
என் தெய்வமே"

St. Thomas
Apostle of India

Mylapore

Palayoor
Kodungalloor
North Paravoor
Gokkamangalam
Niranam
Nilakkal
Kollam
Thiruvithamcode

**புனித மேரிமாதா ஓர்த்தடோக்ஸ் தேவாலயம்**

**திருவிதாங்கோடு Ph : 04651 -250219**



*அரப்பள்ளி*

புனித மேரிமாதா ஓர்த்தடோக்ஸ் தேவாலயம்
திருவிதாங்கோடு


முதல் பதிப்பு : 1 ஏப்ரல் 2010

நூலாசிரியர் : அருட்திரு. ஜோர்ஜ் K. வர்கீஸ்

வெளியிடுவது : உயர் அருட்திரு. பர்சிலிபீ றம்பான்
நிர்வாகி & பங்குதந்தை, புனித தோமையார் சர்வதேச திருத்தலம்,
திருவிதாங்கோடு, கன்னியாகுமரி மாவட்டம், தமிழ்நாடு.

பிரதிகளின்
எண்ணிக்கை : 10,000

விலை : ரூ. 15/-

அச்சிடுவோர் : இவான்ஸ் பிரிண்டேர்ஸ்,
ஜேக்கப்ஸ் காம்பவுண்ட், மார்த்தாண்டம்.
Ph : 04651 272666, 377222

மொழிபெயர்ப்பு : N. ஜாண் பெனடிக்ட்
புனித ஜோர்ஜ் ஓர்த்தடோக்ஸ் தேவாலயம், பாலவிளை.

Sponsored by : **K.T. George, TVM**



# உள்ளடக்கம்



அரப்பள்ளியை புனித தோமையார் சர்வதேச திருத்தலமாக
பரிசுத்த காதோலிக்க பாவ அறிவிக்கிறார்.




புதிதாக கட்டப்பட்டு வருகின்ற தேவாலய மேடையின் தோற்றம்





# திருவிதாங்கோடு தேவாலயமும் மார்த்தோமன் பாரம்பரியமும்

டாக்டர். கப்றீயேல் மார் கிரிகோரியோஸ்
மெத்றாபோலித்தா

**முன்னுரை :**

கிறிஸ்துவின் சீடராகிய புனித தோமையார் கி.பி. 63-ல் நிறுவிய திருவிதாங்கோடு புனித மேரிமாதா தேவாலயம் இன்று ஒரு உலகளாவிய திருத்தலமாக விளங்குகிறது. இந்த வரலாற்று முக்கியத்துவமான தேவாலயம் நூற்றாண்டுகளாக பிரசித்தியில்லாமல் இருந்தாலும் இப்போது அரப்பள்ளியில் எல்லா மதத்தைசார்ந்த மக்களும் இங்கு வருகை தந்து அருள்வரங்களை பெற்றுச் செல்கிறார்கள்.

**அரப்பள்ளி :**

புனித தோமையாருடன் தொடர்புடைய தென் இந்தியா பாரம்பரியத்தில் திருவிதாங்கோடு ஆலயத்தின் முக்கியத்துவம் மிக சிறப்பானதாகும். எல்லா வரலாற்று குறிப்புகளிலும் திருவிதாங்கோடு தேவாலயத்தின் பெயர் காணப்படுகிறது. அரப்பள்ளி என்று இதனை ஆதாரபூர்வம் அழைக்கப்படுகிறது. அரை என்றால் பாதி என்பதல்ல அரசன் என்ற பொருளில் நாம் புரிந்துகொள்ள வேண்டும். அரசன் (அரஜன்) என்ற திராவிட சொல்லுக்கு மன்னன் என்று பொருள், அரசன் வசிக்கின்ற வீடு (பவனம்) அரண்மனையும், அரசனுடைய இடத்தில் நிற்கின்ற ஆலமரம் அரையாலும் என்பது போல அரசனின் உதவி மற்றும் சிறப்பு கண்காணிப்பில் கட்டப்பட்ட இந்த ஆலயத்திற்கு அரப்பள்ளி என்ற மதிப்புமிக்க பெயர் கைவந்தது.

**திருவிதாங்கோடின் பழமையும், பெருமையும் :**

சேர பேரரசின் முதல் தலைநகரமாக திருவிதாங்கோடுயிருந்தது. திருவிதாங்கூர் நாட்டின் முதல் பெயர் திருவிதாங்கோடு என்றதாக



இருந்ததன்றோ. திருவிதாங்கோடின் அடுத்துள்ள பத்மனாபபுரம் அரண்மனை வரலாற்றுச் சிறப்புமிக்கதாகும். திருவிதாங்கோட்டின் பக்கத்தில் உள்ள சின்ன முட்டம்துறைமுகம் முந்நூறு அடி ஆழமுடையது. இந்த துறைமுகத்தில் கப்பல்கள் கரையில் வந்தடைவதற்கு வசதியுண்டு. அரபியர்களும், யூதரும், ரோமரும் பாபிலோனியரும் ஆசீரியரும் சீனரும் கேரளத்தில் மற்றுமுள்ள துறைமுகம் போல சின்னமுட்டம் துறைமுகம் வழியும் கிறிஸ்தவ மதம் முதல் நூற்றாண்டுக்கு, முன்பு வியாபாரம் மூலமாக ஏற்பட்டதற்கு வரலாற்றில் ஆதாரங்கள் உள்ளன. புனித தோமையார் திருவிதாங்கோடு வந்ததும் சின்ன முட்டம் துறைமுகம் வழியாக என்று கருதப்படுகிறது.

**மார் தோமா பாரம்பரியம் :**

புனித தோமையார் நிறுவிய திருவிதாங்கோடு ஆலயத்தை அந்த பகுதி மக்கள் தோமையார் கோவில் என்று அழைத்து ஆதரிக்கிறார்கள். தோமையாரிடமிருந்து திருமுழுக்கு பெற்றதாக பரம்பரையாக நம்பபடுகின்ற திருவிதாங்கோட்டின் பக்கத்தில் உதயகிரி பகுதியில் உள்ள அமலகிரி அம்மன் குடும்பம் வசித்திருந்த இடத்தை தோமையார் தோட்டம் என்றும் அழைக்கிறார்கள். இவருடைய பக்கத்தில் புனிதேமையாரின் காலமுதலுள்ள குடும்பத்தின் தலைவருடைய பெயரும், வரலாறும் குறிப்பிடப்பட்டுள்ள ஓலைசுவடுமுள்ளது. இன்று ஓர்த்தடோக்ஸ் சபை பாதுகாத்துவரும் வீர ராகவப்பட்டயம் இந்த குடும்பத்திற்கு கிடைத்ததாக அவர்கள் உரிமைப்படுகின்றார்கள். நான்காம் நூற்றாண்டின் இறுதியிலும் ஐந்தாம் நூற்றாண்டின் ஆரம்பத்திலும் வாழ்ந்திருந்த இரவிக்கொற்றன் ஆசான், கொற்றவடுகன் ஆசான் என்பவர்களுக்கு மந்தாரசேரன் என்ற சேரன் ராஜா எழுதி கொடுத்த முக்கியமான பட்டயம் என்று அவர்கள் உரிமை கொண்டாடுகின்றனர். அமலகிரி அம்மன் குடும்பத்தின் குடும்பத்தலைவர்களின் பட்டியலில் முதலில் சொன்ன பெயர்களும் உள்படுகிறது. புனித தோமையார் வந்திறங்கிய சின்ன முட்டம் கடற்கரையின் பக்கத்து தெருவில் பதினைந்து அடி அளவில்



உயரமுள்ள பழமையான பெரிய கல்சிலுவை காணலாம். இது தோமையார் சிலுவை என்று அறியப்படுகிறது. அங்கே புனித தோமையாரின் ஆசிர்வாதத்தில் அடைக்கலம் கொண்டு அநேக மக்கள் காணிக்கை பொருட்களுமாக வழிபட செல்கிறார்கள். கடலோரத்தில் ஒரு பழைய கிணறு காணப்படுகிறது. இதனை தோமையார் கிணறு என்று அழைக்கிறார்கள் உபயோகமில்லாதிருந்த தண்ணீர் தோமையார் ஜெபம் செய்து நன்னீர் ஆக மாற்றினார் என்பது பாரம்பரியம். இந்த தண்ணீரை இன்றும் மக்கள் பக்தியோடு அருந்துகின்றனர். சின்ன முட்டத்தின் பக்கத்தில் முட்டம் பகுதியில் மணக்குடி என்ற இடத்தில் புனித செபஸ்தியாரின் பெயரில் ஒரு கத்தோலிக்க தேவாலயம் உண்டு. இது தோமையார் ஆலயம் என்று அழைக்கப்படுகிறது.

**தரிஸப்பள்ளி :**

புனித தோமையார் திருவிதாங்கோடில் துவங்கிய புனித மேரிமாதா தேவாலயம் தோமையார் கோவில் என்று மட்டுமல்ல தரீஸாகோவில் என்றும் அழைககபபடுகிறது. அந்த குடும்பங்கள் கதரீயா குடும்பங்கள் என்ற பெயரில் கோவிலுக்கு தெற்கு பக்கமாய் தோமையார் கிறிஸ்தவர்கள் வசித்து கொண்டிருக்கின்ற தெரு இன்றும் தரிசா தெரு என்று அழைக்கப்படுகிறது. தரிதாய்க்கல் மாறாது என்றொரு சொல்லும் காணலாம். தரீஸா என்ற பெயர் த்ரீசோ (தரீஸா) என்று சுரியானி சொல்லுடைய ஒரு மருவாகும். இதற்கு உண்மையானது தெளிவானது என பொருள். த்ரீஸாயீ ஷப்கோ என்பதன் முழு பொருள் உண்மையான புகழ், தெளிவாக்கப்பட்ட புகழ் இது கிரேக்க மொழியில் நின்று வந்த ஓர்த்தடோக்ஸ் என்ற சொல்லின் சரியான பொருளாகும். தெளிவாக்கப்பட்ட புகழ், விசுவாசம் நிலைநிறுத்துகின்ற கிறிஸ்தவர்கள் தரிசாகாரர், அவர்களுடைய கோவில் தரிசாகோவில் என்று அழைக்கப்படுகிறது. கி.பி.4-ம் நூற்றாண்டில் உண்டான வேத விபரீதம் அகற்றி பிதாவுக்கும் சுதனுக்கும் பரிசுத்த ஆவிக்கும் புகழ் என்ற திருத்துவ நாம புகழ் சொல்கின்ற, ஓடர்த்தடோக்ஸ் நம்பிக்கையை பாதுகாத்த கிறிஸ்தவர்கள் திருவிதாங்கோட்டில் தரிசாக்காரர்கள். கி.பி.



1-ம் நூற்றாண்டு முதல் இன்று வரை சத்திய விசுவாசமும் நம்பிக்கையும் தோமையார் மூலமாக பாதுகாத்து நிலைநிற்கிறது என்றபதை தரீசா சத்தத்தின் மூலம் உறுதிப்படுத்துகிறது.

**மத நல்லிணக்கத்தின் அடையாளம் :**

புனித தோமையார் திருவிதாங்கோடு வரும்பொழுது சேர நாட்டை ஆண்டிருந்தது. இமயவரம்பநெடுஞ்சேரலாதன் ஆகும் அந்த இடம் திருவிதாங்கோடு ஆகும். இமயவரம்பன் பெரிய கோட்டைகள், தேவாலயங்கள், அரசமாளிகைகளும் கட்டுவதற்காக அதிகமாக காடுகளை அழித்தார் என்று சங்ககால காப்பியங்களில் ஒன்றான பதிற்று பத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. (1-ம் நூற்றாண்டில் எழுதப்பட்டது என்று கருதப்படுகின்றது). தேவாலய கற்பனை யூதருக்கும் கிறிஸ்தவர்களுக்குள் உருவானதாகும். சூழ்நிலை காரணமாக கிறிஸ்தவ ஆராதனைக்காக நிலம் கொடுத்தனர் என்று கருதலாம். பதிற்று பத்தில் குறிப்பிடுகின்ற கடவுள் மண என்ற சொல் எல்லாம் எல்லாமான கடவுளின் வீடு என இதை உறுதிப்படுத்துகின்றது. கிறிஸ்துவின் சீடராகிய தோமையாரின் செயல்பாடுகளில் விருப்பமுடையவராகி ஆலயம் கட்ட அனுமதியும் வழங்கியதாக சுட்டிக்காட்டப்பட்டுள்ளது இந்த காரணத்தினால் தான் நாச்சிலியார் என்ற கவிஞர் இமய வரம்பனை சான்றோர் புரவிலன் (சான்றோர்களின் பாதுகாவலர்) என்று பெருமைப்படுத்துகிறார். சான்றோர் என்றால் லத்தீன் மொழியில் Sanctus ஆதாவது (பரிசுத்தமானது என்ற சொல்லிலிருந்து உருவாகி இருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது. சான்றோர் என்றால் பரிசுத்தன் என்று பொருள். பண்டைய காலத்தில் கிறிஸ்தவர்களை புனிதர்கள் என்று அழைத்தார்கள். திருவிதாங் கோட்டிலிருந்து சில கிலோமீட்டர் தொலைவிலுள்ள திருநயினார்குறிச்சி என்ற இடத்தில் கி.பி. 1-ம் நூற்றாண்டில் திருக்குறளை இயற்றிய திருவள்ளுவர் வாழ்ந்திருந்ததாக சில வரலாற்று ஆசிரியர்கள் சுட்டிக்காட்டுகிறார்கள். தோமையாரும் திருவள்ளுவரும் ஓரே இடத்தில் ஓரே காலத்தில் வாழ்ந்தார்கள் என்று நம்பப்படுகிறது. திருக்குறளும் கிறிஸ்தவ நெறிகளும் தம்மில் ஏராளமான



ஒற்றுமையுள்ளது என பண்டைய ஆராய்ச்சிகள் சுட்டி காட்டுகிறது. சுருக்கமாக வரலாற்றின் முத்திரைகளும் மதபரத்திலான ஒற்றுமையின் அடையாளமாக திருவிதாங்கோடு விளங்குகிறது. புனித தோமையாரின் கால்தடம் பதித்த மிக புகழ் பெற்ற திருத்தலமாகும் திருவிதாங்கோடு அரப்பள்ளி. திருவிதாங்கோடு ஆலயம் உலகளாவிய திருத்தலமாக வளர வேண்டியது ஒரு மதத்தினுடைய தேவையல்ல மனித நாகரீகத்திற்கு தேவையானது.



# கிறிஸ்து சீடனாகிய புனித தோமையாரின் திருவிதாங்கோடு ஆலயம்

அருள்திரு பெர்சிலீபி றம்பான்
நிர்வாகி புனித தோமையார் சர்வதேச திருத்தலம்,
திருவிதாங்கோடு

நற்செய்தி பரப்ப நல்மகிழ்வுடன் AD 53-ல் இந்தியாவில் வந்த தோமையார் AD 63-ல் திருவிதாங்கோட்டில் ஒரு கோவில் நிறுவினார். இந்த கோவில் 20 நூற்றாண்டுகளுக்கு பின்னர் அதனுடைய ஒரு வரலாற்று சான்றாக இன்றும் நிலை நிற்கின்றது. கன்னியாகுமரி முதல் காசர்கோடு வரை உள்ள பகுதியை சேர நாடு என்று அழைக்கப்பட்டது. புனித தோமையாரின் காலயளவில் சேர நாட்டில் ஏழரை ஆலயங்களை நிறுவினார் என வரலாறு கூறுகின்றது. கெடுங்கல்லூருக்கு பக்கத்தில் உள்ள மாலியங்கரை சாவக்காடு பக்கத்தில் உள்ள பாலையூர், வடக்கன் பறவூர் பக்கத்திலுள்ள கோக்கமங்கலம் நிரணம், கரிக்கோணி பக்கத்தில் உள்ள கொல்லம், தங்கசேரி நிலைக்கல், சாயல் என்ற இடங்களில் தோமையார் ஆலயங்களை நிறுவினார். அரப்பள்ளி என்று தெரியப்படுகின்ற திருவிதாங்கோடு கோவில் முழுமையான ஒரு ஆலயமாக நிறுவப்பட்டது.

**அலயத்தின் அளவு :**

5.5 அடி நீளமும் 18 அடி அகலமுமான ஆலயம் 1 அடி அகலமுள்ள கருங்கல் சுவருகளால் உருவாக்கப்பட்டது. உள்ளே காணப்படுகின்ற கருங்கல் தூண்களுக்கு 2 அடி அகலமும் 8 அடி உயரமும் உண்டு இதனுடைய மேல் கூரையும் கருங்கல் பாளிகள் கொண்டு வேயப்பட்டிருக்கிறது.

ஆலயத்தின் முன்வாசலில் 5.5 உயரமும் 2.5 அடி அகலமும் உண்டு இதன் மேல் பகுதியில் புனித திருப்பலிக்கு உபயோகப்



படுத்துகின்ற அப்பக்கிண்ணத்தின் வடிவமும் அதற்கு இரு பக்கங்களிலும் கைகள் விரித்து செபிக்கின்ற இரண்டு தூதர்களும் விண்ணுல கைப்பற்றிய வடிவமுள்ள படங்களும் கருங்கல்லினால் செதுக்கி வைக்கப்பட்டுள்ளது.

போர்ச்சுக்கீசியர்கள் பரிசு கொடுத்த செபபீடமும் தூபகலசமும் கோவிலில் காணப்படுகிறது செப பீடத்தினுடைய இருபுறங்களிலும் செய்துள்ள படங்களும் மக்களை அதிகம் வியப்புக்குள்ளாக்கியது. மரம் கொண்டு வேலை செய்த இந்த பேடகத்தினுடைய வாசல்களில் சாவி ஏந்தி நிற்கின்ற புனித பேதுருவும் நற்செய்தியினுடைய சுழற்றிய வாளேந்திய புனித பவுலடியாரின் சித்திரங்கள் செதுக்கப்பட்டுள்ள பேடகத்தின் பக்கவாட்டில் கிறிஸ்துவினுடைய சிலுவை மரணத்தை நினைவு கூருகின்ற விதத்தில் உள்ள இரண்டு படங்கள் உண்டு.

1. ஒரு பெலிக்கல் பறவை தன்னுடைய குஞ்சுகளுக்கு மார்பை குத்தி திறந்து கடைசி துளி இரத்தம் வரையும் ஊற்றி கொடுத்து அவைகளுடைய தாகம் தீர்க்கிறது.

   கடவுள் தன்னுடைய கடைசி துளி இரத்தம் வரையும் தன்னுடைய மக்களாகிய நமக்கு அளித்ததின் நினைவாகும்.

2. ஒரு பினிக்ஸ் பறவை தீயில் எரிந்து அதனுடைய சாம்பலில் நின்று புதிய ஒன்றுக்கு உருவம் கொடுக்கிறது போல, இயேசு கிறிஸ்து உயிர்தெழுந்ததை நினைவுப்படுத்துகிறது.

பெட்டகத்தின் உள்ளே பலகைகளின் சிலுவை அடையாளங்கள் காணலாம். நடுவே உள்ள பெரிய சிலுவையினுடைய கீழ் இரண்டு தலையோடுகளுடைய படம் காணப்படுகிறது. பேடகத்தில் குறிப்பிடப்பட்ட எழுத்துகள் இது வரையிலும் புரியவில்லை மூருங்கைச் சாறுகளால் இந்த படங்கள் வரையப் பட்டிருக்கின்றது. இன்றும் இது தங்க நிறத்தால் ஜொலிக்கிறது. ஜெபபீடத்தினுடைய பின் சுவரில் கருங்கல்லில் ஒரு சிலுவை செதுக்கி வைக்கப்பட்டுள்ளது. தூணுகளில் உள்ள விளக்குகள், மின் விளக்குகள் வரும் முன் திரிபோட்டு எண்ணெய்



ஊத்தி வெளிச்சம் ஏற்படுத்தப்பட்டது. பல விதமான பூக்களும் படங்களும் சிறிதாக கருங்கள் சுவர்களில் காணலாம்.

பண்டைய காலங்களில் பயன்படுத்தியிருந்த திருமுழுக்கு தொட்டியும் ஆலயத்திலுனுள் பாதுகாக்கப்படுகிறது. ஆலயத்தின் வடக்கு பக்கத்தில் கால் கழுவுதற்கான ஒரு கல் தொட்டியும் முற் காலமுதல் அதை பத்திரபடுத்தி வைக்கப்பட்டுள்ளது.

A.D 1-ம் நூற்றாண்டில் சேர மன்னன் இமய வரம்பன் நெடுஞ்சேர லாதன் இமயமலை வரை பயணம் சென்றதாகவும் அந்த பயணத்தில் குந்தப்பர் அதாவது கோண்டகோறஸ் ராஜாவினுடைய விருந்தாளியாக தங்கினார் அந்த வேளையில் அங்கே இருந்த தோமையாருடைய அற்புத ஜெபங்களை கண்டறிந்து அவர்களையும் கொஞ்சம் குடும்பங்களையும் திருவிதாங்கோடு கொண்டு வரவும் செய்தனர். அரச குடும்பங்களில் உள்ளவர்கள் அரசரின் அனுமதியோடு கிறிஸ்துவின் வழியில் சேர்ந்தனர்.

துவக்கத்தில் உதய சான்றோர் என்ற ஒரு மனிதன் அவருடைய மக்களை சான்றமான் மிகா, யாக்கோபு, சன்றமான் மிக அஸ்திரியாஸ் கஹிஷா என்ற பெயரில் குருக்களாக நியமித்தனர். (மன்மிக என்றால் அரசகுலம் என்று பொருள்) இந்த குருக்களின் உறவினர்களுக்கு வீரராகவ பட்டயம் என்ற சாசனத்தை வழங்கினர். (ஏ ஸ்ரீதரன் மேனோன் கேரள வரலாறு பக்கம் 222) திருமுழுக்கு அடைந்தவர்கள் ஆலயத்தின் வடக்கு பக்கத்தில் வசித்து வந்தனர். புனித தோமையார் திருவிதாங்கோட்டில் வாழ்ந்த காலத்தில் திருவள்ளுவர் என்ற மகான் திருவிதாங்கோடு அருகில் உள்ள திருநாயினார் குறிச்சி என்ற இடத்தில் வசித்தார் திருவள்ளுவருடைய திருக்குறள் என்ற சுவடியில் கிறிஸ்தவ வசனத்தை காண முடியும்.

இது இவர்கள் தம்மில் உள்ள உறவை உறுதி படுத்துகின்றது. திருவள்ளுவரில் தோமயாருடைய போதனைகள் ஆதிக்கம் செலுத்தியிருந்ததாக கருதுவதில் தவறு இல்லை. தோமையார்



திருவிதாங்கோடு வந்தார் என்று கூறப்படும் வரலாற்று சுவடுகளும் சங்ககால காப்பியங்களும் இப்பொழுதும் உள்ளன. சங்ககால காப்பியங்களில் கிறிஸ்தவ சிந்தனைகள் கிறிஸ்தவ ஒருமைப்பாடு காணமுடிகிறது. சில பகுதிகளின் இடப்பெயர்களும் தோமையாருடைய நினைவை நமக்கு உணர்த்துகிறது.

**முடிவுரை :**

வரலாற்று சுவடுகளின் குறைவினாலும் தேவைககேற்ற கவனம் செலுத்தாமல் போன ஒன்றுதான் திருவிதாங்கோடு புனித மேரிமாதா தேவாலயம். இங்கே இருந்த கிறிஸ்தவ சமூகமும் மலங்கரை சபையுடைய மூன்றாம் கத்தோலிக்க புனித பெசேலியோஸ் ஹீவர்க்கீஸ் திதியன் பாபாயுடைய காலத்தில் இந்த ஆலயத்தின் திருப்பணிகளில் சபை கவனம் செலுத்தியது. கி.பி. 1942-ல் ஹீவர்க்கீஸ் றம்பான் இதற்காக நியமிக்கப்பட்டார். அவருடைய காலத்திற்கு பிறகு மீண்டும் கோயில் சபையினுடைய கவனத்தில் நின்று பின்தள்ளப்பட்டது. இன்று மீண்டும் இச்சபைக்கு முக்கியதுவம் கொடுத்து மக்கள் கவனம் செலுத்தவேண்டி உற்சாகப்படுத்தப்படுகிறார்கள். பற்பல சாதி மதத்தினரும் இன்று இந்த ஆலயத்தில் ஜெபிப்பதற்காக வருகிறார்கள். புனித தோமையாருடைய நற்செய்தியின் அடையாளமாக திருவிதாங்கோடு கோயில் உள்ளது. புனித தோமையார் பாரதத்தில் நற்செய்தி அறிவித்தின் ஒரு மைல்கல் ஆக திருவிதாங்கோடு தேவாலயம் உள்ளது.

**திருவிதாங்கோடு கோயிலின் அற்புத எண்ணெய் :**

திருவிதாங்கோடு தேவாலயத்தில் உள்ள திருவிளக்கில் உள்ள எண்ணெய் அதிக பிரசித்தி பெற்றது. பலசாதி மதத்தினரான விசுவாசிகள் இதை வீடுகளில் பாதுகாப்பதுண்டு. கோவில்களிலும் மற்ற காரியங்களுக்கும் இந்த எண்ணெயை விசுவாசிகள் பக்தியுடன் இதை பயன்படுத்துவதுண்டு. அநேக அற்புத நிகழ்ச்சிகள் நிகழ்ந்ததாக கூறுவதுண்டு. ஏராளமானோர் மகப்பேறு அடைந்து, நோய் மாறி சுகம் அடைந்தவராயும் விசுவாசிகள் சாட்சியம் அளிக்கின்றார்கள். அதிக



தொலை இடங்களில் இருந்து ஏராளமானோர் விளக்கெண்ணெயை தேடி வருவதுண்டு. தோமையாருடைய கைப்பட்ட தேவாலயத்தின் அணையாவிளக்கின் எண்ணெய் ஒரு ஆசீர்வாதத் தைலமாக விளங்குகின்றது. அதிகரித்து வரும் தேவைகள் காரணமாக இங்கே வருகிற எல்லா விசுவாசிகளுக்கும் தனித்தனியாக தயார்செய்த சிறு குப்பிகளில் கொடுக்கப்பட்டுவருகிறது. இதற்கு தேவையான எண்ணெயை விசுவாசிகள் காணிக்கையாக அளித்துவருகின்றன.



# திருவிதாங்கோடு அரப்பள்ளி

## வரலாற்று சுவடுகளோடுகூடே....

Fr. மானோஜ் K. வர்க்கீஸ்
குலசேகரம்

**முன்னுரை :**

மலங்கரை ஓர்த்தடோக்ஸ் சபைக்கு வரலாறு சேர்த்து வைத்த வரப்பிரசாதம் தான் திருவிதாங்கோடு புனித மேரிமாதா தேவாலயம் தோமையாருடைய கைப்பட்ட இந்த தேவாலயம் அதிக காலம் மறைவாக காணப்பட்டது. சிப்பிகளுக்கு உள்ளே உள்ள முத்து யாருடைய கண்ணில் படாமல் இருந்தாலும் இறுதியில் அரசனின் நெஞ்சில் திளங்குவது போல கிறிஸ்தவ சபையுடைய விலை மதிக்கத்தக்க புனித தலமாக விளங்குகிறது. இந்த சிறிய தேவாலயம் நுற்றாண்டுகளுக்கு முன்பே உள்ள கருங்கல் தூண்களும் கல்சுவருகளும், கற்சிற்பங்களும் பழமையுடைய தனிமையோடு நிலைநிருத்திருக்கின்ற உலகத்தின் அபூர்வ தேவாலயத்தில் ஒன்றாக இது உள்ளது.

தோமையார் திருவிதாங்கோடு தேவாலயம் நிறுவியது என்பது ஒரு கதையாக கருதுபவர்களும் உண்டு ஆனால் இது உண்மையானது என கூற வரலாறே சான்று

**தற்போதுள்ள தேவாலயம்**

தமிழ்நாட்டில் கன்னியாகுமரி மாவட்டத்தில் தக்கலை என்ற பகுதியில் இருந்து இரண்டு கிலோ.மீ மேற்காக திருவிதாங்கோடு என்ற கிராமத்தில் உள்ள அரபள்ளி என்று அறியப்படுகிற புனிதமேரிமாதா தேவாலயம் உள்ளது. ஒரேகண்ணோட்டத்தில் ஒரு இந்துமத கோவிலின் தோற்றத்தில் காணப்படுகிற இந்த தேவாலயம் மற்ற ஆராதனை ஆலயங்களை விட மிக சிறியது. 25 செண்ட் இடத்தில் இந்த தேவாலயம் அமைந்துள்ளது. 25 அடி நீளமும் 16 அடி அகலமும் 10 அடி உயரமும் கொண்ட தேவாலயம் அதனுடைய பழமையை நிலைநாட்டி பலிபீடத்தின் முன்பகுதியில் சிறிய மாற்றங்கள் செய்யப்பட்டதை உணர முடியும்.



கருங்கல்லினால் அமைத்த சுவருகள் 2.5 அடி கனமும் 10 அடி உயரமும் உள்ளது. அதில் 5 இஞ் 7 இஞ் அகலமும் உயரமும் உள்ள இரண்டு வாசல்களும், 20 இஞ் அகலமும் 4 அடி 9 இஞ் உயரமும் உள்ள இரண்டு கதவுகளும் உண்டு. முக்கிய வாசல் 5.5 அடி உயரமும் 2.75 அடி அகலமும் உள்ளது ஆகும். இதில் உள்ள கிளிவாசல்கள் புராதன அரண்மனைகளில் காணப்படும் வகையில் உள்ளவையாகும் தேவாலயத்தினுடைய மேற் கூரைக்கு பழைய எருசலேம் தேவாலயத்தினுடைய மேற்கூரைக்கு அதிக ஒற்றுமை உண்டு முக்கியவாசலின் முன்புறத்தில் பரிசுத்த பலிக்கு உபயோகமான அப்பத்தினுடையவும் இரசம் பருகுகின்ற கிண்ணத்தினுடையவும் அதனுடைய இரண்டு பக்கங்களிலும் ஜெபிக்கின்ற தூதர்களின் உருவங்கள் செதுக்கி வைக்கப்பட்டுள்ளது. சுவரில் சிறிய சிலுவையின் உருவம் அல்லாமல் இயேசுவினுடையவோ மாதாவினுடையவோ மற்று சீடருடையவோ உருவங்களோ படங்களோ அங்கே இல்லாதது கிறிஸ்தவ சபை ஆராதனைகளும் மற்றும் வழிபாட்டு முறைமைகளும் பின்பற்றுவதற்கு முன்பே உள்ள தேவாலயம் என்பது நமக்கு தெளிவாகின்றது (சிந்தனையே பின்தொடர்கிறது).

சிறிய பூக்களுடைய சித்திர வேலைப்பாடுகள் கூடிய சிறியதும் அதே வேளையில் பழமையானதுமான திருமுழுக்கு தொட்டி பழமையின் சின்னமாக ஹைக்கலானுடைய வலது பக்கத்தில் இருக்கின்றது ஹைக்கலானுடைய நடுவில் காண்கின்ற சித்திர வேலைப்பாடுகளுடைய மேசையின் வடிவத்தில் உள்ள போர்த்துகீசியர் தேவாலயத்திற்கு அளித்தாக கருதப்படுகிறது. இதனுடைய முன் பக்கத்தில் திறவுகோல் பிடித்து நிற்கின்ற பேதுருவுடையவும், வாள் ஏந்தி நிற்கின்ற பவுலுடையவும் படங்கள் வைக்கப்பட்டுள்ளது. ஒரு பக்கத்து பெலிக்கல் பறவையின் சித்திரம் காணலாம். தன் குஞ்ஞுகளுக்கு மார்பு பிளர்ந்து இரத்தம் கொடுக்கின்ற பறவையினுடைய படம். இயேசு கிறிஸ்துவினுடைய கல்வாரியிலே தியாகத்தினுடைய நினைவாக தொடக்ககால சபை கருதுகிறது. பீடத்தினுடைய இன்னொரு பக்கத்தில் பெரிய ஒரு சிலுவையும் அதற்கு கீழே சம்மனசக்கள் பறவைகள் தாவரங்கள், இரண்டு தலை ஓடுகளுடைய படங்கள் காணமுடியும். பீடத்தில்



காண்கின்ற எழுத்துகள் எந்த மொழி எழுத்தென்று புரிந்து கொள்ள இயலவில்லை. பார்வையில் லெத்தீன், போர்த்துகீஸ் மொழி போன்றோ தோன்றுகின்ற எழுத்துகள் ஏராளமான வெளிநாட்டு ஆராய்ச்சியாளர்கள் வந்து ஆராய்ச்சி செய்திருக்கிறார்கள். இந்த பீடத்தில் உள்ள எழுத்துகளுக்கும் படங்களுக்கும் எந்த விதத்திலான நிறம் பயன்படுத்தி இருக்கிறார்கள் என்று உறுதி படுத்த இயலவில்லை. எனினும் இன்றும் அவை தங்கத்தினுடைய நிறம் போல திளங்குகின்றது. போர்த்துகீசியருடைய தனிப்பட்ட அன்பளிப்பு என கருதபடுகிற பஞ்சலோகத்தில் செய்த சின்ன தூபகலசமும் இங்கே பாதுகாக்கப் படுகிறது. தேவாலயத்தினுடைய பின் பக்கத்தில் உள்ள சுவரின் உயரத்தில் பாம்பு படம் எடுத்து ஆடுவது போன்று உள்ள மூன்று வடிவங்கள் செதுக்கி வைக்கப்பட்டுள்ளது. தேவாலயத்தின் மேற்கு பக்கத்தில் உள்ள நீர் தொட்டி தோமாயாருடைய காலத்தில் கால் கழுவ பயன்படுத்தப்பட்டுள்ளதாக கருதப்படுகிறது. கருங்கல்லினால் செய்த பீடம் கால் வைக்கவும், தண்ணீர் ஒழுகி செல்ல விதத்தில் செய்யப்பட்டது இன்று வரை பாதுகாக்கப்படுகிறது. தேவாலயத்தினுடைய அருகாமையில் உள்ள கிறிஸ்தவர்களுடைய வீடுகளில் நடைபெறுகிற திருவருட்சாதன விழாக்களில் இன்றும் கால் கழுகுதல் பெரிய முக்கியதுவம் உள்ள ஒன்றாக கடைபிடிக்கப்படுகிறது. இவ்வளவு முக்கியத்துவமும் பழைய கால பொருட்களை உடையதுமான இத்தேவாலயம், நீண்ட காலம் மறைவாக இருந்தது என்பது ஆச்சரியமாக உள்ளது.

**வரலாற்று ஆதாரங்கள்..**

கேரளத்தில் முதல் கிறிஸ்தவர்களை குறித்து கிடைத்திருக்கின்ற ஆதாரங்கள் மிக முக்கியதுவம் வாய்ந்தவை ஆகும். போர்த்துக்கீஸ் மிஷனறிகளின் எழுத்துகளும் மற்ற ஆதாரங்களும் கி.பி. 16-ம் நூற்றாண்டில் மெனாசீஸ் ஆண்டகை கிரந்த நவீகரணத்துக்கு முக்கிய வழிகாட்டி கொடுத்தவராவர். பிரான்சீஸ்கோ டீறோஸ் தொடக்ககால கிறிஸ்தவ குடியேற்றத்தை குறித்து உள்ள காரியங்கள் அவருடைய கிரந்தத்தில் குறிப்பிட்டுள்ளார். அவர் சொல்லுகிறது மைலாப்பூரில் உள்ள கிறிஸ்தவர்கள் கேரளத்தின் பல இடங்களில் குடியேறியதாக கூறுகிறார்.



அதில் கொடுங்கல்லூரும், கொல்லத்திலும் உள்ள மக்களின் விசுவாசமும் வழிபாடும் காக்கப்பட்டன. ரோஸனோபோல தான் பண்டைய போர்த்துகீஸ் மிஷனறிகளான பிரான்சீஸ்கோயும், டைனீஷாயுடையும், ஆன்றணியோ, கவ்யாவினுடையும் கடிதங்களில் இதே கருத்துக்களை காணலாம். ரோஸினுடைய கடிதங்களில் திருவிதாங்கோட்டு கிறிஸ்தவர்களை குறித்து இவ்வாறு கூறப்பட்டுள்ளது. கொடுங்கல்லூரும், கொல்லமும் கூடாத தொருமலையும், பேய்ப்பூரும், திருவிதாங்கோடும் மைலாப்பூரில் நின்று வந்த கிறிஸ்தவர்கள் குடியிருக்க துவங்கினார்கள். மைலாப்பூரில் கிறிஸ்தவர்கள் குடியேறி பார்ப்பதற்கு இந்த இடத்தை தேர்தெடுத்தார். காரணம் அங்கே கிறிஸ்தவ மக்கள் நிலை கொண்டதும் றோஸினுடைய ஆதாரங்கள்படி கொல்லத்திலும் கொடுங்கல்லூரில் உள்ள கிறிஸ்தவ மக்களின் செயல்பாடுகள் மந்தமாக காணப்பட்டதுமாகும்.

பின்பு ஆர்ச்சு பிஷப்பு மெனஸீனுடைய காலத்தில் இவர்களை ரோமா சபையில் கொண்டுவருவதற்காக சில முயற்சிகள் நடத்தியதாக தெரிந்து முப்பது வருடம் முன்பு மாத்யூஸ் என்ற ஒரு பாதிரியார் திருவிதாங்கோடு வந்ததாகவும் அவர் சுமார் முந்நூறு ஆட்களுக்கு திருமுழுக்கு கொடுத்ததாகவும் அதில் குறிப்பிட்டுள்ளது.

Michael Geddis னுடைய The history of the church in Malabar என்ற புத்தகத்தில் சுனுகோதோஸினுடைய 8-ம் பாகம் 6-ம் பத்தியில் இவ்வாறு காணப்படுகிறது. சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு நல்ல ஒரு பகுதி விசுவாசிகள் மற்ற ஜாதிகளோடு சென்றனர். பிற கோவில்களில் இருந்து அருட்பணியாளர்களை எந்தநேரமும் அங்கே அனுப்பாததுமே இதன் காரணம். விசுவாசிகளுக்கு திருமுழுக்கு கொடுப்பதற்கு தேவையான அனுமதி திருவிதாங்கூர் அரசரிடமிருந்து (உத்தரவு ஓலை) மெனாஸீஸ் பெற்றிருந்தார்.

கி.பி. 1518- போர்த்துகீஸ் மிஷனறி ஆன துவாத்தே பார்போஸா கன்னியாகுமரிக்கு அடுத்துள்ள அர்மோனியாக்களின் தேவாலயம் இருந்தது என்று குறிப்பிட்டுள்ளார். அங்கே ஆராதனை நடந்தது என்றும் பலிபீடத்தில் சிலுவைகள் உண்டு என்றும் அவர்



குறிப்பிட்டுள்ளார். அதுமட்டுமல்ல ஊர்மக்களாகிய மீனவர்கள் அங்கே ஆராதனையில் பங்கேற்றிருந்தார்கள் என்றும், லத்தீனில் எழுதப்பட்டுள்ள ஒரு கல்லறை கண்டெடுக்கப்பட்டதாகவும் அவர் குறிப்பிட்டிருக்கிறார். அங்கே ஒரு போர்த்துகீஸ் மிஷனறி அந்த தரிசா பள்ளியில் வேலை செய்ததாகவும், அங்கே முகமதியனும் இந்துக்களும் தங்குவதாகவும் பாபோஸா குறிப்பிட்டுள்ளார். அங்கு உள்ள மக்களைப் பற்றியும் கோவிலுனுடைய காரியங்களை கவனிக்கின்ற ஒரு மார் தோமா கிறிஸ்தவனை பற்றியும் அவர் குறிப்பிடுகின்றார்.

சென்னை அரசாங்கம் கி.பி. 1718 -ல் வெளியிட்டுள்ள Dutch in Malabar என்ற புத்தகத்தில் Adrian moens என்ற அந்த கவர்னருடைய எழுத்துகளில் திருவிதாங்கோடு விசுவாசிகளை பற்றியுள்ள செய்தி அதிக முக்கியத்துவம் பெறுகிறது. அவர் இவ்வாறு எழுதுகிறார். கி.பி. 1599-ல் அர்க்காதியாக்கோன் ஜார்ஜ்-யையும், சபையையும் ஆர்ச் பிஷப் மெனாஸீஸ், ஜெவீட் பாதிரியார், திறமை சாலியும், இறை வல்லுனரும், மொழி பண்டிதனுமாகிய றோஸினுடைய (Ross) ஆதரவோடு ரோமினுடைய சபையின் கீழில் கொண்டுவரப்பட்டது. ஆனால் கன்னியாகுமாரி அடுத்த திருவாங்கோட்டில் உள்ள தருதாய்க்கன் மாறா என்று அறியப்படுகிற தோமா கிறிஸ்தவர்களை அவர்களால் தன்வசப்படுத்த முடியவில்லை.

இதில் இருந்து தெளிவாகிறத என்னவென்றால் உதயம் பேரூர் சுன்னகதோஸூக்கு முன்பு திருவிதாங்கோட்டில் தோமா கிறிஸ்தவர்கள் என்ற சிறிய கூட்டம் இருந்தது. ஜெவீட் பாதிரியார்கள் கடினமாக உழைத்தும் அவர்களால் தோமா கிறிஸ்தவர்க்ளை கத்தோலிக்க நம்பிக்கையில் கொண்டுவரமுடியவில்லை. பிறகு இவர்கள் வெளிநாட்டு மிஷனறிகளின் வசம் ஆனார்கள். பிறகு அவர்களில் நின்றுள்ள அவமானங்களை தொடர்ந்து தோமா கிறிஸ்தவர்கள் ஆக மாறி நின்றார்கள் என்று கருதப்படலாம். கி.பி. 18-ம் நூற்றாண்டில் மலங்கரை சபையினுடைய ஆதாரங்களில் திருவிதாங்கோட்டை பற்றியுள்ள கருத்துக்கள், அவர்களை மீண்டும் சுறியானி சபையுமாக ஒன்று சேர்ந்தது என கருதப்படுகிறது.



**மலங்கரை சபை நிலைநாட்டுகிற பாரம்பிரியம் :**

கி.பி. 18-ம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சில சுரியானி எழுத்துகளில் நின்று கிடைத்தது. கி.பி. 1705 ல் வாழ்ந்த மார் கப்றீயேலுனுடைய சுறியானி கடிதத்தில் இவ்வாறு காணலாம். கிறிஸ்துவுடைய பிறப்பின் 52- ஆண்டுகளுக்கு பிறகு அப்போஸ்தலரான புனித தோமையார் மைலாப்பூர் கோரமண்டல கடற்கரையில் வந்திறங்கினார். அவர் அங்கே நற்செய்தி போதிக்கவும் தேவாலயம் துவங்கவும் செய்தார். அதே போல் கோட்டைக்காவு ரெப்போலியும், கோதமங்கலமும், பெர்னாற்றாவும் திருவிதாங்கோட்டிலும் கோவில் துவங்கினார்.

மிங்கானுடைய Early spreed of christianity in india என்ற புத்தகத்தில் இரண்டு இடங்களில் திருவிதாங்கோட்டையும் தோமையாருடைய பாரம்பரியத்தை நினைவுபடுத்துகின்ற சுறியானி ஆதாரங்களும் காணப்படுகிறது.

மலபாரில் நின்றுள்ள யாக்கோபையா இந்தியாக்காரனுடைய சுரியானி கடிதத்தில் காணப்படுகிற, கி.பி. 52-ம் ஆண்டில் புனித தோமையார் பாரத்திலுள்ள மைலாப்பூரில் வந்து அங்கே அவர் பிதாவுனுடையயும் சுதனுடையும் பரிசுத்த ஆவியினுடையும் நாமத்தினால் அனேகம் மக்களை திருமுழுக்கு கொடுத்து, பிறகு அவர் மலபாரில் மாலியாக்கரையில் வந்தார். அங்கே இரண்டு பேருக்கு பட்டம் கொடுத்தார். அவர் பிறகு குற்றிகாயில் வந்து அங்கே ஒரு கோவில் துவங்கினார். அதேபோல் தான் ரெப்பேலியிலும், கோதமங்கலத்திலும், நிரணத்திலும் திரபாகோட்டிலும் கோவில் துவங்கினார். கி.பி. 1721-ல் தோமஸ் நான்காம் என்ற ஆயர், டச் கவேசகனாக லீட் சிலே கார்லோச் ஸ்தாபி (Carolous schaaf of leiden) தோமையாரைகுறித்து உள்ள பாரம்பரியத்தை பற்றி எழுதி, தோமையார் நிறுவிய 7 கோவில்கள் முதலில் மைலாபூர் பிறகு கொடுங்கல்லூர், கரகார், இரப்போலி, கோதமங்கலம், நிரணம், திரம்பக்கோடு பற்றியும் குறிப்பிட்டுள்ளார். கி.பி 18-ம் நூற்றாண்டில் எழுதிய மலங்கரை சபை வரலாறினுடைய கையெழுத்து புத்தகத்தில் தோமையார் நிறுவின கோவில்கள் 6 என குறிப்பிடப்பட்டுள்ளது.



1. மாலியங்கரை, 2. கொட்டக்காவு, 3. எடப்பள்ளி,

4. கோதமங்கலம், 5. நிரணம், 6. திருவிதாங்கோடு.

இவை எல்லாம் பொதுவானவை மலங்கரை சபையில் கி.பி. 17,18 நூற்றாண்டுகளில் தோமையார் நிறுவின ஆலயங்களைப் பற்றி சரியான கணக்குகள் இல்லை அதிலேயே முக்கிய இடங்களில் திருவிதாங்கோடு தேவாலயத்தின் பெயர் எழுதப்பட்டுள்ளது.

**சங்ககால கிறிஸ்தவம் :**

கேரளத்தின் வரலாறு படிப்பவர்களுக்கு தவிர்க்க முடியாத வரலாற்று உண்மைகளை புராதன தமிழ் ஆதாரங்கள் மூலமாக (சங்ககால சுவடிகளில்) தெளிவாக உணர முடிகிறது. இதில் முக்கியமானது பதிற்றிப்பத்து என்ற சுவடு ஆகும். இது சேரநாட்டின் முதல் பத்து அரசர்களின் ஆட்சியைப் பற்றியுள்ள பாடல்கள் ஆகும். 10 பாடல்கள் வீதம் 10 அதிகாரங்கள் கொண்டதால் இதனை பதிற்றிப்பத்து என்று அழைக்கப்படுகிறது. இதில் முதல் மற்றும் பத்தாவது அதிகாரங்கள் தொலைந்து விட்டது. ஆனாலும் கேரளத்தினுடையவும் அதை சுற்றியுள்ள பகுதிகளுடையவும் வரலாற்றைப் பற்றியுள்ள செய்திகள் இதில் இருந்து கிடைக்கின்றது மற்றும் முக்கிய சுவடிகள் அகநானூறும் புறநானூறும் இதிலிருந்து சேர மன்னன் சேரன் செங்குட்டுவனின் காலக்கட்டம் ஏறத்தாழ A.D 155 ற்கும் 210ற்கும் இடைப்பட்ட காலமாகும் என நம்பப்படுகிறது. ஏனெனில் மன்னனின் நண்பராக இருந்த இலங்கை மன்னன் கஜபாகுவின் காலம் A.D 173 - 195 வரை ஆக இருந்தது. இந்த ஆதாரத்தினின்றும் மற்ற தெளிவுகளி விருந்தும் சேர மன்னர்களுடைய ஆட்சி காலம் அறியப்படுகிறது.

தோமையார் வந்தார் என்று விசுவசிக்கும் காலக்கட்டத்தில் சேர நாட்டை ஆண்டது இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன் என்ற மன்னனாகும். அவருடையக்காலக்கட்டம் A.D 7முதல் 65 வரை என கருதப்படுகிறது. சேர நாட்டின் மிகவும் சிறந்த மன்னர்களில் ஒருவராக நெடுஞ்சேரலாதன் இருந்தார்

சேர மன்னராகிய செங்குட்டுவனின் இளைய சகோதரனான இளங்கோவடிகள் இயற்றிய நூல் சிலப்பதிகாரம் மணிமேகலை ஆகும்.



சங்ககால கவிஞர்களாகிய பரணர், கபிலர், ஔவையார், அகஸ்தியர் போன்றவர்களின் எழுத்துகளிலும் பண்டையக் காலத்தின் நாகரிகத்தைப் பற்றியும் வாழ்க்கை முறையைப் பற்றி நாம் அறிய முடிகிறது.

இமையவரம் பன் நெடுங்சேரலாதன் காலத்தில் நாடு மிகவும் செழிப்பாய் இருந்தது. அவர் ரோமன் நாடுகளில் உள்ளவர்களுடன் வியாபார தொடர்பு கொண்டிருந்தார் என்பதைப் பற்றிய ஆதாரங்கள் உள்ளன. பிளீனிக்கன் எழுத்துக்கள், ரோமன், கிரேக்க ஆதாரங்கள் முதலியவை. அது மட்டுமல்ல பாண்டிச்சேரிக்குப் பக்கத்தில் உள்ள அரிக்கமேடு என்ற இடத்தில் தோண்டிஎடுக்கப்பட்ட ஆதாரங்களைக் கொண்டு முதல் நூற்றாண்டில் ரோம் செங்கல் கொண்டு கட்டிய கட்டடங்கள் ஆகியவை முக்கிய ஆதாரங்களாக இருக்கின்றது. அகநானூறில் எப்படி ரோம கப்பல்கள் கேரளத்தின் கடற்கரையில் வந்து தங்கம் மற்றும் வாசனைப் பொருட்களை பண்டமாற்று முறையில் வியாபாரம் செய்தது பற்றி விவரிக்கப்பட்டுள்ளது. மேலும் கேரளத்தின் பல பகுதிகளிலிருந்தும் கிடைத்துள்ள முதல் மற்றும் இரண்டாம் நூற்றாண்டின் நாணயங்களும் முக்கிய ஆதாரங்களாக உள்ளது.

இதில் முக்கியமான குறிப்பு சேர அரசின் முதல் தலைநகரம் திருவிதாங்கோடு பகுதியாய் இருந்தது. அதனால் தான் அதன் பக்கத்தில் உள்ள சின்னமுட்டம், குளச்சல் போன்ற புராதன துறைமுகங்களுக்கு முக்கியத்துவம் கிடைத்ததாக பதிற்றிப்பத்து விவரிக்கின்றது. இமயவரம்பன் உதயன் சேரனின் மகன் முதல் நூற்றாண்டின் 2 ஆம் பகுதியில் ஆட்சி புரியும் போது பெரிய கோட்டைகளுக்கும் தேவாலயங்களுக்கும் அரசமாளிகைகளுக்கும் ஆக ஏராளமான காடுகள் வெட்டி அழிக்கப்பட்டது. பொதுவாக காணப்படுவது முதல் நாற்றாண்டுகளில் கேரளமக்களுக்கு மதம் ஒன்றும் இல்லை அவர்கள் கேரளர், இயற்கை மத விசுவாசிகளாக காணப்பட்டனர். இதில் பயன்படுத்தும் வார்த்தை கடவுள்மனை என்ற சொல்லக்கு பொருள் என்னவென்றால் எல்லாம் எல்லாம்மான கடவுள் ஆகும். மனை என்ற சொல்லுக்கு வீடு என்பது பொருள்.

இது எந்த தேவாலயம் என்று சிந்திக்கும் பொழுது வடஇந்தியாவில் உருவகிவரும் புத்த, ஜெயின, ஆரிய மதமாக வழி



இல்லை ஏனெனில் அவர்களுக்கு கடவுளின் ஆலயம் என்ற நினைவு இல்லாமல் இருந்தது. இங்கே தான் அந்தக் காலக்கட்டத்தில் கிறிஸ்துவின் சீடனாகிய தோமையார் நற்செய்தி பரப்புவதற்காக வந்தார் என்ற முக்கியத்துவம் பெறுகிறது. அவர் தேவாலயம் நிறுவினார் என்ற பாரம்பரியத்திற்கும் இதுவும் சேர்த்து சிந்திக்கும் பொழுது அவருடைய பெருமை தெரிகிறது. இமையவரம்பன் கிறிஸ்துவின் சீடரான தோமையாரின் செயல் பாடுகளில் விருப்பமுடையவராகி ஆராதனை ஆலயங்கள் கட்ட உதவினார் என்பது மறுக்க முடியாதது. அது மட்டுமல்ல மன்னர்கள் உட்பட அனைவரும் இந்த புதிய விசுவாசிகளின் வாழ்க்கை முறைகளைக் கண்டு அவர்களை மிகவும் மதித்து இருந்ததனர் என்று அறிய முடிகிறது. இவர்களை சான்றோர் என்று அழைத்திருந்தனர் சங்ககாலத்தில் பல இடங்களிலும் சான்றோர் களுடைய வாழ்க்கை முறையைப் பற்றியும் அவர்களுடைய செயல்பாடுகளைப் பற்றியும் மிகவும் போற்றத்தக்க முறையில் விவரிக்கப்பட்டுள்ளது. நாச்சிலீயார் என்ற கவிஞர் சேரலாதனை சான்றோர் புரவலர் என்று அழைக்கிறார். இதன் பொருள் சான்றோர்களுடைய பாதுகாவலன் என்பதாகும். கவிஞர் கபிலர் அழியாதனை கூறுவது சான்றோர் பெருமகன் (சான்றோரின்) மகனாகிய மகன் என்பதாகும். சான்றோர் என்ற வார்த்தைக்கும் Sanctus என்ற வார்த்தைக்கும் இடையில் பொருத்தம் உண்டு என்பதை அறிய முடிகிறது.

விவிலியத்தின் பெயரோடு தொடர்புடைய பெயர்கள் இந்த பகுதிகளில் நிலைத்திருப்பதும் சிந்திக்க வேண்டியதாகும். ஆதம் (ஆதாம்) எவா (ஏவா) மூஸ் (மோசே) போன்ற பெயர்களோடு திராவிட தேவதைகளாகிய மாரியம்மா, எல்லாம்மா, (மரியா, எலிசபத்) என்ற பெயர்களும் கிறிஸ்தவ பெயர்களோடு தொடர்புடையது. அந்தக்காலத்தில் பிணங்களை அடக்கிய கல்லறைகளின் வடிவமும் கிழக்கு மேற்காக பிணங்களை அடக்குவதும் பாலஸ்தீனியர்களின் பழக்கத்தோடு மிகவும் பொருத்தம் முடையது.

சங்ககாலத்தில் பல இடங்களிலும் கிறிஸ்துவைப் பற்றிய வரிகளும் சான்றோர்களை புகழ்த்தும் வரிகளும் கவிஞர்கள் எழுதி இருந்தனர்.



தொல்காப்பியம் சொல் அதிகாரம், 24-ஆம் வரியில் மன்னாப்பொருள் அன்னை இயேற்றேன் என்று எழுதி இருக்கிறது. இதன் பொருள் தொல்காப்பியத்தை விவரிப்பவரான இளம் புரனரும் சோனா வரையரும் விவரிப்பது இது இல்லப்பொருள் என்பதாகும் நச்சினார்க்கினியர் இதனை விவரிப்பது நினையாப்பொருள் (பாதுகாக்கமுடியாதது) என்பதாகும்.

புனிதயோவான் எழுதிய நற்செய்தியில் காணும் திருச்சட்டம் மோசே வழியாக வந்தது கிருபையும் உண்மையும் ஏசு வழியாக வந்தது என்ற கருத்தை பண்டைக்காலத்தமிழர் சான்றோரின் மெய்மற என்று சொல்லி இருந்தனர்.

திருக்குறளின் முதல்ப்பாட்டில் முதல் வரி
“அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.”

இதன் பொருள் எழுத்துக்கள் எல்லாம் அகரத்தில் தொடங்குவது போல இந்த உலகமும் இறைவனில் தொடங்குகிறது. இது புனித யோவான் எழுதுவது போல அகரமும், கைரமும் நானே என்பதாகும்.

பண்டைக்காலத்தமிழ் பேச்சுவழக்கில் ஹீப்ரு, அராமிய, அறபி, லத்தின் போன்ற மொழிகள் ஆதிக்கம் செலுத்தியதைக் காணமுடியும். பல தமிழ் வார்த்தைகளுக்கும் கிறிஸ்தவ சொற்களுடன் தொடர்பு உண்டு சிலுவை என்ற சிரியன் வார்த்தை இன்றும் தமிழில் உபயோகிக்கப்படுகிறது. நாடு என்ற வார்த்தையும் Nation என்ற சொல்லும் குரிசு என்ற வார்த்தையும் தரிசா என்ற வார்த்தையும் தம்மில் மிகுந்த ஒன்றுமை காணப்படுகிறது. இந்த கருத்துக்கள் தான் கிறிஸ்தவ கருத்துகளுக்குள் சங்ககால கவிஞர்களுக்குள்ள தொடர்பை குறிப்பிடுகிறது.

தமிழ் வரலாற்று ஆசிரியர்கள் தெளிவாக்குவது திருக்குறள் எழுதியது திருவள்ளுவர் ஆவார்.

**தோமையார் ஆலயமும் தோமையார் சிலுவையும் :**

கன்னியாகுமரிக்கு கிழக்குப் பகுதியில் உள்ள இடம் முட்டம். அங்கே மணக்குடி என்ற இடத்தில் புனித தோமையாரின் பேரில் ஒரு



தேவாலயம் உண்டு. இந்த பக்கத்தில் சின்ன முட்டம் என்ற புராதன துறைமுகம் உண்டு. இங்கே கடலில் 300 அடி ஆழம் உண்டு. கப்பல்கள் கடற்கரைக்கு வந்துசேர தக்கவிதத்தில் இது இருக்கிறது. புனித தோமையார் சின்ன முட்டம் துறைமுகம் வழி இங்கே வந்தார் என்பது வரலாறு. இங்கே 15 அடி உயரம் உள்ள பெரிய கல்சிலுவை உண்டு. இது தோமையார் சிலுவை என்று அழைக்கப்படுகிறது. இங்கே காணும் தோமையார் கிணற்றின் தண்ணீர் பண்டைக்காலத்தில் கலங்கியதாகவும் உபயோகிக்கமுடியாததுமாக இருந்தது. மக்களின் வேண்டுதலுக்கிணங்கி புனித தோமையார் அதன் மேல் ஜெபித்தப்போது தெளிந்த நல்ல குடிதண்ணீராக மாறியது. இந்த தண்ணீரை இன்றும் மக்கள் பக்தியுடன் உபயோகிக்கிறார்கள்.

**திருவிதாங்கோடு தேவாலயத்தின் புகழ் :**

புனித தோமையார் பாரத நாட்டில் வந்தார் என்பதற்கான ஆராதரங்கள் இன்றும் நிலை நிற்கும் கிறிஸ்தவ சமூகங்களும் மைலாப்பூரில் உள்ள கல்லறையும், புனித தேமையார் நிறுவினார் என்ற பாரம்பரியமுள்ள தேவாலயங்களும் ஆகும். அவரில் நின்று திருமுழுக்கு பெற்றதாக கருதப்படும் குடும்பங்களின் வரலாறுகளும் மற்றும் அவ்வாவி மக்களின் கலாச்சாரங்களும் அந்த முறையில் கட்டப்பட்டுள்ள தேவாலயம் தான் திருவிதாங்கோடு புனித மேரிமாதா தேவாலயம். முதல் நூற்றாண்டு முதல் இங்கே ஒரு கிறிஸ்தவ சமூகம் நிலை நின்றது என்பதற்கு பல ஆதாரங்களும் உண்டு.

திருக்குறள், பதிற்றுபத்து, தொல்காப்பியம், அகநானூறு, புறநானூறு போன்ற தமிழ் காப்பியங்களில் கிறிஸ்தவ சிந்தனைகள் கிறிஸ்தவ சமூகத்தோடு தொடர்புள்ளவர்களோடு உள்ள தொடர்பு சுட்டிகாட்டப்பட்டுள்ளது. தமிழ் மொழியில் காணப்படும் பல சுரியானி அரபி, கிரேக்கம் வார்த்தைகள் திரிஸ்சாய் என்ற சுரியானி வார்த்தைகளிலிருந்து தரிசாய், சிலுவையை சுட்டிகாட்டும் சிலுவை போன்றவை கிறிஸ்தவர்களுடைய செயல்பாடுகள் சமூகத்தில் அவர்களை குறித்து ஒரு நல் எண்ணம் கிடைக்கிறது.

திருக்குறளில் சான்றோர்களுடைய வாழ்க்கைப்பற்றி மதிப்பிற்குரிய சிந்தனைகளும் அவர்களை போல வாழவேண்டும் என்ற



எண்ணங்களும் முதல் கிறிஸ்தவர்களைப் பற்றியுள்ள சமூகத்தின் கண்ணோட்டத்தில் தெளிவாகின்றது.

திருவிதாங்கோட்டில் உள்ள தோமையார் இல்லம், சின்னமுட்டம் தோமையார் சிலுவை, தோமையார் கிணறு, பொறையன் கால்வாய் முதல் கிறிஸ்தவர்கள் வாழ்ந்திருந்த திரிசாய் தெரு போன்ற இடங்கள் புனித தோமையாருக்கு திருவிதாங்கோட்டோடு தொடர்பு உண்டு என்பதும் இது ஒரு கற்பனை கதை இல்லை என்பதும் தெளிவாகின்றது.

போர்ச்சுகீஸிய குறிப்புகளில் புராதன சுரியானி கடிதங்களிலும் உள்ள கி.பி. 1591-ல் உதயம் பேரூர் சுன்னக தோஸிலும், கி.பி. 1518 ல் பற்போதையின் நூலிலும் கி.பி. 1718 அட்றியன் மோயான்ஸ் என்ற ஆளுநருடைய கடிதத்திலும் நான்காவது தோமையாரின் சுரியானி கடிதத்திலும் இந்த தேவாலயத்திற்கு அன்று மிக உயர்ந்த இடம் உண்டாயிருந்தது என்பது தெளிவாகின்றது. அது மட்டுமல்ல இந்த குறிப்புகளில் எல்லாம் இங்குள்ள கிறிஸ்தவ சமூகத்தினரின் முக்கியத்துவத்தை விவரிக்கின்றது.

அப்படியென்றால் கி.பி. 18 - ஆம் நூற்றாண்டிற்கு பிறகு உள்ள வரலாற்று குறிப்புகளில் புனித தோமையார் நிறுவிய ஆலயங்களின் பெயரினின்று திருவிதாங்கோடு மெல்ல மெல்ல காணாமல் போனது கவனிக்க தக்கது. அது மட்டுமல்ல அதுவரை இல்லாதிருந்த தேவாலயங்களின் பெயர்கள் இந்த காலகட்டத்தில் கடந்து வந்ததையும் காணலாம். இதற்கெல்லாம் காரணம் என்ன என்பது பற்றி இன்னும் தெளிவாகவில்லை. இந்த காலகட்டம்முதல் அதிக அளவில் வரலாற்று குறிப்புகள் வெளிவந்தது. அது மலங்கரை சபையின் வரலாற்று ஆசிரியர்களுடையது அல்ல என்பது கவனிக்கத்தக்கது. அதனால்தான் இந்த புத்தகங்களில் புனித தோமையார் பாரம்பரியம் உள்ள தேவாலயங்களின் பெயர்கள் வேகம் காணாமல் போனதும் திருவிதாங்கோடு காணாமல் போனதாகவும் கருதப்படுகிறது.

மலங்கரை சபையின் கட்டுப்பாட்டிலுள்ள இந்த தேவாலயத்தைப் பற்றி வேண்டிய அளவு கவனம் அன்று இருந்தவர்களிடம் காணப்படவில்லை. அரசியல் சண்டைகளும் மற்றும்



முக்கியமான பிரச்சனைகள் உண்டாயிருந்ததினால் இந்த தேவாலயத்தின் சிறப்புகளை பற்றியோ, வரலாற்றைபற்றியோ வேண்டிய அளவு விசாரிப்பதற்கு சூழ்நிலை இல்லாதிருந்ததென்று கருதலாம்.

**புதிதாக்கும் பாதையில் :**

திருவிதாங்கோடு பகுதியில் உண்டான கொள்ளை நோய்களால் ஏராளமான மக்கள் இறந்தனர். அதிக அளவில் மக்கள் பல இடங்களிலும் குடிப்பெயர்ந்தனர் திருவனந்தபுரம், கொல்லம், கார்த்திகப்பள்ளி, காயங்குளம் மற்றும் குண்டறை போன்ற இடங்களில் இந்த பாரம்பரியம் உள்ள குடும்பங்கள் உண்டாயிருந்தது. இவர்கள் திருவாம்கோடர் என்று அழைக்கப்பட்டனர். திருவிதாங்கோட்டில் ஒன்று இரண்டு குடும்பங்கள் மட்டும் இருந்தது. அவர்களுக்கு தேவாலய ஆராதனையை தொடர்ந்து நடத்த முடியாமல் இருந்தனர். ஆகவே அதிக காலம் ஆலயம் அனாதையாய் கிடந்தது.

கி.பி. 1927 - 28 இந்த காலகட்டத்தில் அன்று நாகர்கோவில் செயல்பட்டுக்கொண்டிருந்த பொறியாளர் கே. கே. குருவிள என்பவரின் தலைமையில் சில திருப்பணிகள் நடந்தது. கருங்கல் கொண்டு வேயப்பட்டிருந்த மேல் கூரையில் ஒரு ஆலமரம் அபாயகரமாக வளர்ந்தது. ஆகவே மேல் கூரை பிரித்து ஓட்டினால் வேயப்பட்டு இன்று நாம் காணும் நிலையில் கட்டப்பட்டது. அது மட்டுமல்ல பிளாஸ்டர் தொழிளாலர்களின் அறிவில்லாத காரணத்தினால் சுவரில் உண்டாயிருந்த சில குறிப்புகள் நஷ்டப்பட்டது மீண்டும் அதிககாலம் தேவாலயம் கவனிக்கப்படாமல் கிடந்தது. பிறகு கி.பி. 1941 - ல் நீதிபதி கே. கே. லூக்காஸ் என்பவரின் தலைமையில் திருவிதாங்கோட்டில் கைவிட்டுபோன சொத்துகள் திரும்ப கிடைக்கும் படியாக முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. பஸேலியோஸ் கி வர்கீஸ் காதோலிக்க பாபா புதுவையில் கோஷி கத்தனார் என்பவரை நியமித்து அனுப்பினார். பிறகு அங்கு நியமிக்கப்பட்ட ஹீவர்கீஸ் ரம்பாச்சன் காலத்தில் கொஞ்சம் சொத்துக்கள் திரும்ப கிடைத்தது இன்று காணும் பலிபீடமும் மற்ற கட்டிடங்களும் புதிதாக கட்டப்பட்டடது. திருவிதாங்கோடு ஆலயத்தின் திருப்பணிக்காக மத்திய திருவிதாங்கூரில் அங்கும் இங்கும் நடந்து அதிக



துன்பப்பட்ட மதிப்பிற்குரிய ரம்பாச்சன் என்பவர் இதற்கெல்லாம் தலைமைத்தாங்கினார். ஆனால் மீண்டும் தேவாலயம் சபையின் கவனிப்பில் நின்று அகன்று போனது. வணக்கத்திற்குரிய பர்ஸிலிபீ ரம்பாச்சன் பொறுப்பேற்ற பிறகு தேவாலயத்தை சமூகத்தின் உயர்ந்த நிலையில் கொண்டுவந்தார். புனித மோறோன் மார் பஸேலியோஸ் திதிமோஸ் பிரதமன் காதோலிக்க பாபா திருவிதாங்கோடு ஆலயத்தை சர்வதேச திருத்தலமாக அறிவித்தார். திருவனந்தபுரம் ஆயர் டாக்டர் கப்றீயேல் மார் கிறிகோரியோஸ் பிஷப்பு செயல் தலைவராக செயல்பட்டார்.

முடிவுரை :

புனித தோமையாரும் திருவிதாங்கோடும் தம்மிலுள்ள தொடர்பு வரலாறுமாய் தொடர்புடையது மட்டுமல்ல சக்தி வாய்ந்த பகுதியாகவும் விளங்குகின்றது. பாரம்பரியங்களும் புனித தோமையாருடன் தொடர்புடைய இடங்களின் பெயர்களும் சங்ககால காப்பியங்களில் காணப்படும் தெளிவுகளும் புனித தோமையாரின் அரியணையில் பங்குள்ள மலங்கரை ஓர்த்தடோக்ஸ் சபை கொஞ்சம் தாமதமாக தான் இந்த உண்மையை அறிந்தது வரலாற்றின் நீதி தெளிவாகிறது. இந்த உண்மை உலகத்திலுள்ள எல்லா கிறிஸ்தவர்களுக்கும் கிடைத்த மிக பெரிய வரபிரஸாதமாகும் என்பதில் சந்தேகமில்லை. இயேசு கிறிஸ்துவின் விலாவில் தொட்ட கரங்களால் கட்டப்பட்ட இந்த தேவாலயத்தின் தூய்மை இங்கே சென்று வருபவர்களுக்கு நன்றாக தெரியும் ஏராளமான விசுவாச சாட்சியங்கள் மக்களுக்கு அனுபவப்பட்டுள்ளது. இந்த கடிதமும் அந்த சாட்சியான ஒருவரால் எழுதப்பட்டது. ஊர்வசி சாபம் உபகார பிரதம் என்பது போல அதிக காலம் ஆனதால் இன்றும் இந்த தேவாலயம் அதே பழமையோடு புதுதாக்கப்படாமல் நிற்கின்றது என்ற எண்ணம் துன்ப நாள்களின் ஏற்படும் துன்பங்களை மாற்றுகிற ஒரு மிக பெரிய புண்ணியதலமாகும் என்பதில் சந்தேகமில்லை. புனித தோமையாரின் ஆசீர்வாதம் நாம் அனைவருக்கும் உண்டாகக்கடவது.



பழமையை சாட்சிப்படுத்துகிற புனித தோமையார் நிறுவிய தேவாலயம்



புனித தோமையார் சர்வதேச திருத்தலத்துக்கு மேலும் ஒரு மகுடமாக
திகழ்கின்ற புனித தோமையாரின் திரு அருளிக்கம்

புனித தோமையாரின் திருஅருளிக்கம் 2009 ஜூலைமாதம் 11ம் தேதி
மேதகு ஆயர் டாக்டர் கப்றீயேல் மார் கிரிகோரியோஸ் திருமேனி
அவர்களால்அர்ச்சிப்பு செய்யப்பட்டது.



அழகிய கலைநுணுக்கத்துடன் தோற்றமளிக்கும்
புனித மேரிமாதா ஓர்த்தடோக்ஸ்
தேவாலயத்தின் பலிபீடம்

EVANS 04651 - 272666, 377222